# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

சாதாரண

புரட்டாசி

உ

முருகா

# வள்ளிமலை சரவணப் பொய்கைத் திருப்பணி

## அரிய சந்தர்ப்பம்

வள்ளிமலை என்ற திருத்தலம், காட்பாடிக்கு 12 மைல் தூரம். முருகப் பெருமான் பலகாலும் திருவடி தோய வள்ளியம்மை பொருட்டு நடந்தருளிய அரிய பெரிய திருத்தலம். எம்பிராட்டி வள்ளியம்மை அவதரித்த மகாதேவி பீடம், இங்கு வந்து வழிபட்டோர் சகல வினைகளும் தீர்ந்து இகபர சௌபாக்கியங்களை எளிதில் பெறுவார்கள்.

இத்திருத்தலத்தில் சரவணப் பொய்கை பழுதுபட்டுளது. இதனைத் திருத்தி யமைப்பது இன்றி யமையாதது. திருப்பணி நடந்து வருகின்றது. எல்லோருக்கும் படியளக்கும் பெருமானுடைய திருக் குளத்துக்குப் படி போடுவது மிக மிக அவசியமாகும். எப்படி எப் படியோ பொருள் செலவழிகின்றது. அப்படியில் நம் பொருள் சேர்ந் தால் அப் படியுள்ள வரை நமக்கு கருணாகரனும் கந்தவேள் படி யளப்பான்.

ஆசிரியர் கிருபானந்தவாரியாரிடமும் நேரில் செலுத்தலாம். ஒரு படிக்கு ரூபாய் 50. 5 படி, 10 படி யென்று பங்கு பெறலாம். மணியார்டர் மூலம் அனுப்புவதாயின் பின்வரும் முகவரிக்கு அனுப்பவும்.

திரு. A. S. அருணசலம் பிள்ளை,
(பொருளாளர்)
A. S. A, பேக்கரி,
லாங்குபஜார், வேலூர் N. A.

## அன்பர்கள் கவனத்துக்கு

15-5-70 முதல் தபால் ரிஜிஸ்ட்ரேஷன் (பதிவுக் கட்டணம்) செலவு 0·75லிருந்து 0·95 ஆக உயர்ந்துள்ளது. புத்தகத்துக்குரிய விலை, தபாற் செலவு இவைகளுடன் மேற்கொண்டு 0·95 சேர்த்து அனுப்பி வைக்கவேண்டும். சில அன்பர்கள் புத்தகங்களின் விலையுடன் 0·95 மட்டும் சேர்த்து அனுப்பி வைக்கின்றனர் இது சரியல்ல. புத்தகத்தின் விலை+தபாற் செலவு+ரிஜிஸ்ட்ரேஷன் செலவு ஆக மூன்றையும் தெரிந்து சேர்த்து அனுப்பி வைக்கவேண்டும்.

## கைவசமில்லை

பின்வரும் புத்தகங்கள் கைவசம் கிடையாது. ஆகவே அந்தப் புத்தகங்களை அனுப்பி வைக்குமாறு அன்பர்கள் யாரும் பணம் அனுப்பி வைக்க வேண்டாமென்று கேட்டுக் கொள்ளுகின்றோம். மறு பதிப்பு அச்சானவுடன் திருப்புகழமிர்தம் மூலமே தெரியப்படுத்து வோம்.

1. கந்தரலங்காரம் (உரையுடன்)
2. திருவகுப்பு, கந்தரந்தாதி (உரையுடன்)—முதலியன
3. கற்புக் கனிகள் முதற் புத்தகம் இரண்டாம் புத்தகம்
4. ஸ்ரீ சுப்ரமண்ய ஸஹஸ்ர நாமம்.

மானேஜர், திருப்புகழமிர்தம்

உ

ஓம் குஹாய நம !



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"





| | | |
|---|---|---|
| மலர் 35 | சாதாரணஹு—புரட்டாசி மீ<br>செப்டம்பர் 1970 | இதழ் 6 |



## திருப்புகழ்

### திருவருணை

கோடான மடவார்கள் முலைமீதே
 கூர்வேலை யிணையான விழியூடே
ஊடாடி யவரோடு முழலாதே
 ஊராக திகழ்பாத மருள்வாயே
நீடாழி சுழல்தேசம் வலமாக
 நீடோடி மயில்மீது வருவோனே
சூடான தொருசோதி மலைமேவு
 சோணாடு புகழ்தேவர் பெருமாளே.

### பதவுரை

நீடு ஆழி சுழல் தேசம்=நீண்ட கடல் சூழ்ந்த வுலகத்தை, வலம் ஆக=வலமாக, நீடு ஓடி=முழுதும் ஓடி, மயில் மீது வருவோனே= மயில்மீது வந்தவரே! சூடு ஆனது ஒரு சோதி மலை மேவும்=நெருப்பான ஒப்பற்ற சோதி மலையாகிய திருவண்ணாமலையில் வீற்றிருப்பவரே! சோணாடு புகழ்=சோழ நாட்டார் புகழ்கின்ற, தேவர் பெருமாளே=தேவர் போற்றும் பெருமையில் மிகுந்தவரே! மடவார்கள்= பெண்களின், கோடு ஆன முலைமீதே=மலை போன்ற கொங்கையி

லும், கூர்வேலே இணை ஆன=கூரிய வேலுக்கு நிகரான, விழி ஊடே= கண்களிலும், ஊடாடி அவரோடு உழலாதே=கலந்து பழகினவனாய் அவர்களுடன் திரியாமல், ஊராக திகழ்பாதம் அருள்வாயே=அடியேனுடைய சொந்த ஊர்போல் விளங்குகின்ற திருவடிகளை அருள வேண்டும்.

## பொழிப்புரை

பரந்த கடல்சூழ்ந்த உலகம் முழுவதும் ஓடி வலமாக வந்தவரே! நெருப்பான, மலையான திருவண்ணாமலையில் எழுந்தருளி யிருப்பவரே! சோழநாட்டு அன்பர்கள் புகழும்—தேவர் போற்றும் பெருமிதமுடையவரே! பெண்களின் மலைபோன்ற தனங்களிலும், கூரிய வேலுக்குச் சமானமான கண்களிலும், கலந்து பழகினவனாய் அவர்களுடன் திரியாமல், அடியேனுடைய சொந்த ஊர்போன்ற உமது திருவடிகளை அருள் புரிவீராக.

## விரிவுரை

**ஊராக திகழ்பாதம்:—**

மனிதனுக்கு அயலூர் வாழ்க்கை அல்லல் தரும்.

அறக்கடவுள் யட்ச வடிவில் வந்து தருமபுத்திரரைப் பல வினாக்கள் வினவினார். அதில் ஒரு கேள்வி.

"எவன் மகிழ்ச்சியை யடைகின்றான் ?"

விடை:—எந்த மனிதன் கடனில்லாதவனாகவும்; அயலூர் போகாதவனாகவும், பகலில் ஐந்தாவது காலத்திலோ ஆறுவது காலத்திலோ கீரையானாலும் தன் வீட்டில் சமைத்து உண்பவனாகவும் இருப்பானோ அவன் மகிழ்ச்சியடைகின்றான்.

ஆதலால் மனிதனுக்கு மகிழ்ச்சியைத்தருவது சொந்தவூர். இறைவனுடைய திருவடி சொந்த ஊர்போல் மகிழ்ச்சியைத் தரவல்லது.

**நீடாழி சுழல்தேசம் வலமாக நீடோடி மயில்மீது வருவோனே:—**

கனிகாரணமாக உலகமுழுதும் ஒரே நொடியில் முருகன் மயில்மீது வலம்வந்தருளினார்.

**"ஆகமம் விளைத்தகில லோகமும் நொடிப்பளவில்
ஆசையொடு சுற்றுமதி வேகக்காரனும்"**

**—வேளைக்காரன் வகுப்பு.**

**சூடான தொருஜோதி மலைமேவு சோணாடு புகழ்தேவர் பெருமாளே:—**

மாலும் அயனும் இகலி, "நான் பரம்" "நான் பரம்" என்று கூறிவிட்டு மலைந்தபோது, சிவபெருமான் அவர்கள் முன்

ஜோதித்தூணாக நின்று அருளினார். அது அண்ணாமலையென வழங்கலுற்றது.

சோழநாட்டு அன்பர்களிடம் அருணகிரியாருக்கு நல்ல மதிப்பு உண்டு. சோழநாட்டைப்பற்றி அவர் கூறும் அரிய பாடல் இது.

"ஈதலும்பல கோலால பூசையும்
ஓதலுங்குண ஆசார நீதியும்
ஈரமுங்குரு சீர்பாத சேவையும் மறவாத
ஏழ்தலம் புகழ் காவேரியால் விளை
சோழமண்டலம்" —(நாதவிந்து) திருப்புகழ்.

கருத்துரை

அருணாசலமேவிய அண்ணலே! உன் பாதமலரைத் தந்தருள்.

## திருப்புகழ்

சிலைநுதல் வைத்துச் சிறந்த குங்கும
திலதமு மிட்டுக் குளிர்ந்த பங்கய
திருமுக வட்டத் தமர்ந்த மென்குமிழ் தனிலேறிச்
செழுமணி ரத்நத் திலங்கு பைங்குழை
தனைமுனி வுற்றுச் சிவந்து நஞ்சணி
செயலினை யொத்துத் தயங்கு வஞ்சக விழிசீறிப்

புலவிமி குத்திட் டிருந்த வஞ்சியர்
பதமல ருக்குட் பணிந்த ணிந்தணி
புரிவளை கைக்குட் கலின்க லென்றிட அநுராகம்
புகழ்நல மெத்தப் புரிந்து கொங்கையி
லுருகிய ணைத்துப் பெரும்ப்ரி யங்கொடு
புணரினும் நிற்பொற்பதங்கள் நெஞ்சினுள்
மறவேனே

கலைமதி வைத்துப் புனைந்து செஞ்சடை
மலைமகள் பக்கத் தமர்ந்தி ருந்திட
கணகண கட்கட் கணின்க ணென்றிட நடமாடுங்
கருணைய னுற்றத் த்ரியம்ப கன்தரு
முருகபு னத்திற் றிரிந்த மென்கொடி
கனதன வெற்பிற் கலந்த ணைந்தருள் புயவீரா

அலைகடல் புக்குப் பொரும்பெ ரும்படை
யவுணரை வெட்டிக் களைந்து வென்றுயர்
அமரர்தொ ழப்பொற்சதங்கைகொஞ்சிட வருவோனே
அடியவ ரச்சத் தழுங்கி டுந்துயர்
தனையொழி வித்துப் ப்ரியங்கள் தந்திடும்
அருணகி ரிக்குட் சிறந்த மர்ந்தருள் பெருமாளே.

பதவுரை

கலைமதி வைத்து புனைந்து=கலையையுடைய பிறைச்சந்திரனைச் சூடி அலங்கரித்த, செம்சடை=சிவந்த சடையுடன், மலை மகள்=மலையரையன் மகளாகிய பார்வதியம்மை, பக்கத்து அமர்ந்து இருந்திட=இடதுபக்கத்தில் விரும்பி விளங்கிட, கணகண கட்கட் கணின்கண் என்றிட=கணகண கட்கட் கணின்கண் என்று ஒலிக்கின்ற, கருணையன்=கருணைக் கடவுளும், உற்ற த்ரியம்பகன் தரு=பொருந்திய மூன்று கண்களையுடையவருமாகிய சிவபெருமான் பெற்ற, முருக=முருகப் பெருமானே! புனத்தில் திரிந்த மென்கொடி=தினைப்புனத்தில் உலாவிய மெல்லிய கொடி போன்ற வள்ளி நாயகியின், கன தன வெற்பில்=பருத்த கொங்கையாகிய மலையில், கலந்து அணைந்து அருள்=சேர்ந்து அணைந்து அருளிய, புய வீரா=புயங்களையுடைய வீர மூர்த்தியே! அலைகடல் புக்கு=அலை கொண்ட கடலில் புகுந்து, பொரும் பெரும்படை=போர் செய்த பெரிய அசுர சேனையையுடைய, அவுணரை வெட்டி களைந்து வென்று=அசுரர்களை வெட்டித் தொலைத்து வெற்றி பெற்று, உயர் அமரர் தொழ=உயர்ந்த தேவர்கள் வணங்க, பொன் சதங்கை கொஞ்சிட வருவோனே=அழகிய சதங்கை இனிய ஒலிசெய்ய வருபவரே! அடியவர்=அடியார்கள், அச்சத்து அழுங்கிடும் துயர்தனை ஒழிவித்து=பயத்தினால் துன்புற்று ஒடுங்கும் வருத்தத்தை நீக்கி, ப்ரியங்கள் தந்திடும்=அவர்கட்கு விருப்பமானவை யாவும் வழங்கியருள்பவரே! அருணகிரிக்கு உள்=திருவண்ணாமலையில், சிறந்து அமர்ந்து அருள்=சிறப்புடன் வீற்றிருந்து அருளுகின்ற, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! சிலை நுதல் வைத்து=வில்லைப் போன்ற நெற்றியின்கண், சிறந்த குங்கும திலதமும் இட்டு=நல்ல குங்குமப் பொட்டையிட்டு, குளிர்ந்த பங்கய திருமுகவட்டத்து அமர்ந்த=குளிர்ந்த தாமரை மலர்போன்ற அழகிய முகவட்டத்தில் உள்ள, மென் குமிழ் தனில் ஏறி=மெல்லிய குமிழம்பூப் போன்ற மூக்கின்மேல் சார்ந்து, செழுமணி ரத்னத்து இலங்கு=செழுமையான இரத்தினமணி விளங்கும், பை குழைதனை=அழகிய குழைகள் தரித்த காதுகளை, முனிவு உற்று சிவந்து=கோபித்துச் சிவந்து, நஞ்சு அணி செயலினை ஒத்து=நஞ்சையுண்ட தன் செய

**லுக்கு ஒப்ப, தயங்கு வஞ்சக விழி சீறி = வஞ்சகங் கொண்டு விளங்கும் கண்கள் கொண்டு சினந்து, புலவி மிகுத்திட்டு இருந்த = ஊடல் குணம் அதிகப் பட்டு இருந்த வஞ்சியர் = கொடி போன்ற பொது மாதர்களின், பதமலருக்குள் பணிந்து = அவர்களின் பாதமலரில் வணங்கி, அணிந்த அணி புரிவளை = அவர்கள் தரித்துள்ள அணிகலனான வளையல்கள், கையில் கலின் கல் என்றிட = கையில் கலின் கல் என்று ஒலிக்க. அநுராகம் = காமப் பற்றுடன் புகழ் நலம் மெத்த புரிந்து = புகழ் நலச் செயல்களை அதிகமாகச் செய்து, கொங்கையில் உருகி அணைத்து = அவர்களின் தனங்களில் உருகித் தழுவி, பெரும் ப்ரியங் கொடு = மிக்க ஆசையுடன், புணரினும் = கலவி செய்தாலும், நின் பொன் பதங்கள் = தேவரீருடைய அழகிய திருவடிகளை, நெஞ்சின் உள் மறவேனே = உள்ளத்தில் மறக்கமாட்டேன்.**

## பொழிப்புரை

பிறைச் சந்திரனை வைத்து அலங்கரித்த செந்நிறச் சடை முடியுடையவரும், மலையரையன் பெற்ற மகளாகிய பார்வதி தேவி இடப்பாகத்தில் அமர்ந்து விளங்க, கணகண கட்கட் கணின் கண் என்ற ஒலியுடன் நடனஞ் செய்கின்றவரும், கருணைக் கடலும், முக்கண்ணரும் ஆகிய சிவபெருமான் பெற்ற முருகவேளே! தினைப்புனத்தில் உலாவிய மெல்லிய கொடி போன்ற வள்ளி நாயகியின் பருத்த தனங்களாகிய மலைகளில் சேர்ந்து அணைந்தருளிய புயங்களையுடைய வீரமூர்த்தியே! அலைகளையுடைய கடலில் புகுந்து சண்டை செய்த பெரிய சேனையையுடைய அசுரர்களை வெட்டித் தொலைத்து வெற்றி பெற்று, உயர்ந்த தேவர்கள் வணங்க, அழகிய சதங்கை கொஞ்சி யொலி செய்ய வருபவரே! அடியார்கள் அச்சத்தால் துன்புற்று ஒடுங்கும் துயரத்தை நீக்கி, அந்த அடியார்கள் விரும்பிய அனைத்தும வழங்கவல்லவரே! திருவண்ணுமலையில் சிறப்பாக எழுந்தருளியிருக்கும் பெருமிதமுடையவரே! வில்லைப் போன்ற நெற்றியில் நல்ல குங்குமப் பொட்டையிட்டு, குளிர்ந்த தாமரை போன்ற அழகிய முகவட்டத்தில் உள்ள மெல்லிய குமிழம் பூப் போன்ற மூக்கின்மேல் சார்ந்து, செழுமையான இரத்தினமணி விளங்கும் அழகிய குழைகள் உள்ள காதைக் கோபித்துச் சிவந்து, நஞ்சினையுண்ட தன் செயலுக்கு ஒப்ப வஞ்சகங்கொண்டு விளங்கும் கண்கள் கொண்டு மிகவும் சினந்தும், ஊடல் குணம் அதிகப்பட்டிருந்தபோது மாதர்களின் பாதமலரில் வணங்கி, அவர்கள் அணிந்துள்ள ஆபரணங்களான வளையல்கள் கையில் கலின் கலின் என்று ஒலிக்க, காம வேட்கையுடன், புகழ்நலச் செயல்களை அதிகமாகச் செய்து, அவர்களுடைய கொங்கையில் உருகி, தழுவி மிகுந்த ஆசையுடன் கலவி செய்தாலும், தேவரீருடைய அழகிய திருவடிகளை உள்ளத்தில் மறக்கமாட்டேன்.

## விரிவுரை

இந்தத் திருப்புகழில் அருணகிரிநாதர், "ஆசை மையலில் ஆழ்ந்து நின்ருலும் முருகன் திருவடியை ஒருபோதும் மறவேன்" என்று தனக்குள்ள உறுதியை அறுதியிட்டுக் கூறுகின்ருர்.

**புணரினும் நின்பொற்பதங்கள் நெஞ்சினுள் மறவேனே:—**

"மாதர் கலவியில் ஈடுபட்டு நிற்பினும் முருகா! உன் பத மலரை மறவேன்" என்கின்ருர்.

இதே கருத்தைச் சுவாமிகள் பல இடங்களில் கூறுகின்ருர்.

"கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்டுண்டயர்கினும் வேல்மறவேன்" —கந்தரலங்காரம்.

பொன், பொருள், பெண், பதவி இவைகள் மயக்கத்தைத் தரும் அபினி போன்றவை. இறைவனை மறக்கச் செய்யும் வன்மை யுடையவை.

"பதவி, செம்பொன் முதலிய எய்தினுலும் முருகா! என் உள்ளம் உன்னை மறவாது" என்று அடிகளார் கூறும் உறுதித் திறன் கண்டுகளிக்கக் கூடியது.

இந்த வகையில் அடியில்வரும் திருப்புகழை ஓதி இன்புறுக.

**தோரண கனக வாசலில் முழவு**
**தோல் முரசதிர முதிராத**
**தோகையர் கவரி வீச வயிரியர்**
**தோள்வலிபுகழ மதகோப**
**வாரணரதப தாகினி துரக**
**மாதிர நிறைய அரசாகி**
**வாழினினும் வறுமை கூரினுமுனது**
**வார்கழலொழிய மொழியேனே.**

**கலைமதிவைத்துப் புனைந்த செஞ்சடை:—**

இருளில் கப்பலில் போகின்றவர்கள் கரையை யடைய விரும்புவார்கள். கரையைத் தெரிவிப்பது கலங்கரை விளக்கு.

பிறவிப் பெருங்கடலில் ஆணவ இருளில் முழுகித் தத்தளிக்கும் ஆன்மாக்கட்கு இறைவனுடைய திருவடியாகிய கரையைக் காட்டும் கலங்கரை விளக்குபோல் சிவபெருமானுடைய சென்னியில் சந்திரன் ஒளி செய்து, உயிர்கட்கு உவகையூட்டுகின்ருன்.

அன்றி தக்கன் சாபத்தால் தேய்ந்து ஒய்ந்த சந்திரன் சிவ பெருமான் திருவடியில் சரண் புகுந்தவுடன், அவனை திருமுடியில் சூடியருள்புரிந்தார். எத்துணைக் கொடிய பாவங்கள் புரிந்தோரும், இறைவனைச் சரண் புகுந்தால் உய்வு பெறுவார்கள் என்ற சிவன் கருணைத் திறத்தைக் குறிக்கின்றது.

சிவபெருமான் பரமயோகி; ஆதலால் அவருடைய சடை செக்கச் செவேல் என்று விளங்குகின்றது.

**நடமாடும்:—**

அகில உலகங்களும் உய்யும் பொருட்டு இறைவன் ஆனந்த நடனம் புரிந்து அருளுகின்றார். ஆடியில் உள்ள நிழல் ஆடவேண்டுமானால் தான் ஆடவேண்டும்.

**''சந்ததமும்**
**நீக்கமின்றி நிழலசைப்பான் போல்புவனம்**
**ஆக்கி அசைத்தருளும் ஆணையும்''**

**—கந்தர் கலிவெண்பா.**

**கருணையன்:—**

சிவபெருமான் கருணையே உருவமானவர். பன்றிக் குருளைகட்குப் பால் கொடுத்த பரம தயாளன்; கரிக்குருவிக்கும், எச்சில் நூலால் பந்தரிட்ட சிலந்திக்கும் அருள்புரிந்த அருட்கடல்; வில்வக்கிளை யுதிர்த்த குரங்கை முசுகுந்தச் சக்ரவர்த்தியாகப் பிறக்குமாறு கருணைபுரிந்த கடவுள். நெய்யருந்த முயன்று, விளக்கினைத் தூண்டிய எலியைப் பலிச் சக்ரவர்த்தியாகச் செய்த பரங்கருணைத் தடங்கடல்.

**அடியவர் அச்சத் தழுங்கிடுந்துயர் தனையொழிவித்துப் ப்ரியங்கள் தந்திடும்:—**

அடியார்கட்கு அச்சத்தினால் ஒடுங்கி நடுங்கி எய்தும் துயரங்கள் எல்லாவற்றையும் விலக்கி, அவர்கள் விரும்பும் பொருள்கள் அனைத்தும் வழங்கவல்ல கருணாமூர்த்தி கந்தவேள்.

**''வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை**
**வேண்டு மளவிலுதவும் பெருமாளே''**

**''வேண்டிய போதடியர் வேண்டிய போகமது**
**வேண்ட வெருதுதவு பெருமாளே''**

**''அடியவர் இச்சையில் எவை யெவை யுற்றன**
**அவை தருவித்தருள் பெருமாளே''**

## கருத்துரை

அருணாசலமேவிய அண்ணலே! மாதர் மையலில் முழுகினாலும் உன் பாதமலரை மறவேன்.

உ
முருகா

# கற்பு

## விஜயராணி

விஜயராணி மகதநாட்டு மன்னவனுடைய செல்வப் புதல்வி. தவத்தின் பயனாகப் பிறந்த தனிப் பெருஞ்செல்வி. அவள் பிறந்த அன்று மகத நாடே மகிழ்ச்சிக் கடலில் முழுகியது. எல்லா ஆலயங்களிலும் இலட்ச தீபங்கள் ஏற்றினார்கள். இலட்சார்ச்சனைகள் நடைபெற்றன. லட்சோப லட்சம் ஏழைகள் பசியாறச் செய்தார்கள்.

விஜயராணி குற்றாலத்தில் வளமையுடன் வளரும் சண்பகமரம் போல் ஓங்கி வளர்ந்தாள். கூரிய அறிவும் சீரிய சிந்தையும் உடைய அவள் இலக்கணம், இலக்கியம், இசை, நடனம், முதலிய சகல கலைகளையும் கற்று உணர்ந்தாள்.

விஜயராணி தினந்தோறும் நீராடி, நீறாடி குங்குமந் தரித்து, பூஜையறையில் அமர்ந்து தேவி பூஜை செய்வாள். "தேவி! பராசக்தீ! ஞானபூரணி! கருணாம்பிகையே! என் சிந்தையை நீ கோயிலாகக் கொண்டு இருக்க வேண்டும். எனக்கு ஒருபோதும் தீய நினைவுகள் வராதிருக்க வேண்டும். உத்தம குணம் பொருந்திய வித்தக நாயகன் எனக்கு வரவேண்டும். உலகில் உயர்ந்த அறப் பண்பு வளர்தல் வேண்டும். அன்பும் அருளும் இன்பும் ஓங்குதல் வேண்டும்" என்று வேண்டிக் கொள்ளுவாள்.

மகளுடைய ஏற்றத்தையுந் தோற்றத்தையுங் கண்டு தாயுந் தந்தையுஞ் சிந்தை மகிழ்ந்தார்கள். தக்க வரனை நாடினார்கள். சுயம் வரம் அமைத்தார்கள். தேனை நாடி வண்டுகள் திரள்வதுபோல் மன்னர்கள் வந்தார்கள்.

மாளவ தேயத்து மன்னவனுடைய குமாரன் மயூரத்துவஜனைக் கண்டு, மனம்மகிழ்ந்த விஜயராணி அவனுக்கு மாலை சூட்டினாள், வேத மந்திரம் முழங்க, சங்கநாதம் முழங்க, விஜயராணிக்கும் மயூரத்துவஜனுக்கும் சிறப்பாகத் திருமணம் நிகழ்ந்தது.

இரதி தேவியும் மன்மதனும்போல் அரண்மனையில் வாழ்ந்தார்கள். ஒன்றுபட்ட உள்ளத்துடன் இல்லற இன்பத்தில் திளைத்தார்கள்.

ஒருநாள் இரவு. அரண்மனை மேல்தளத்தில் வெல்வெட்டு சாய்வு நாற்காலியில் அரசன் சாய்ந்து அமர்ந்திருந்தான். வான் நிலவு; இல்லை தேன் நிலவு. அருகில் பூத்த மலர் வஞ்சிக்கொடி போல் விஜயராணி அமர்ந்திருந்தாள்.

அவள் அவனுக்குத் தெவிட்டாத தேனமுதாகக் காட்சியளித்தாள்.

மன்னன், "மானே! மரகதமே! கடவுள் பெண்ணிடத்தில் எத்தனை அழகைக் குவித்து வைத்துள்ளார். ஆ! காணக் கண் கோடி வேண்டும் போல் தோன்றுகின்றது. உன்னை மனைவியாகப் பெற்ற நான் பாக்கியசாலி. புண்ணியஞ் செய்தவன். மாதர் என்ற சொல்லுக்கு அழகு என்பது பொருள். அழகு மிகுந்திருப்பதால் பெண்களை மாதர் என்பார்கள். நீ அழகுக் குவியல்."

"என் அன்பின் சிகரமே! உங்களின் அளவற்ற அன்புக்கு நன்றி. தாங்கள் கூறுவதை நான் மறுப்பதாக நினைக்கக்கூடாது. ஆண்களுக்கும் அழகு உண்டு. ஆண் மயிலுக்கு அழகான தோகை யமைந்துளது. சேவல் கோழிக்குச் செக்கச் செவேல் என்று கொண்டை யமைந்துளது. ஆண் கலைமானுக்கு கிளை கிளையாக அழகான கொம்பு அமைந்துள்ளது. ஆண் யானைக்கு வெள்ளை வெளேர் என்று கண்டார் கருத்தைக் கவரக்கூடிய அழகிய தந்தங்கள் அமைந்திருக்கின்றன. ஆதலால் ஆண்களுக்கு அழகில்லை என்று எவ்வாறு கூறமுடியும்?"

பெண்மணியே! நீ கூறியவை யாவும் உண்மைதான். என்றாலும் பெண்ணிடத்தில் இனிமை சாந்தம் கவர்ச்சி முதலிய உயர்ந்த பண்புகள் இயல்பாக அமைந்துள்ளன. பெண் குரலில்தான் எத்தனை இனிமையை இறைவன் வைத்துள்ளான். "பாகு கனிமொழி" என்றும் "தேன் என்று பாகு என்று உவமிக்கொணா மொழி" என்றும் ஆன்றோர்கள் கூறியுள்ளார்கள்.

கூந்தல் அழகும், வலம்புரி சங்கு போன்ற கழுத்தின் அழகும், மான் போன்ற கண்ணழகும் படைத்த பெண் பிறப்பு உயர்ந்தது. இதனால்தான்

"பெண்ணில் பெருந்தக்க யாவுள?"

என்கின்றார் திருவள்ளுவர்.

"பெருமானே! தாங்கள் சொல்வதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். ஆண்கள் இருந்தால்தான் பெண்ணுக்குப் பெருமை, ஆண் கொழு கொம்பு, பெண் கொடி; பெண்ணாகிய கொடி தாவிப் படர்கின்ற கொழு கொம்பு கொழுநன். கொழுநன் என்ற சொல்லால் இது உறுதியாகின்றது. பெண்ணுக்குக் கண்போன்றவன் நாயகன். கண் அவன். கணவன் என்ற சொல்லால் இது விளங்குகின்றதல்லவா? பெண் உடம்பு, கணவன் உயிர். கணவன் இல்லாத பெண் உயிரில்லாத உடம்பு போன்றவள். பெண் மலர், கணவன் மணம், கணவன் இல்லாத பெண் மணமில்லாத மலர் போன்றவள். கணவன் இருந்தால்தானே மனைவி மலர் சூடி மணம் பெறுகின்றாள். ஒரு பெண்ணுக்குப் பெருமை வாழ்வு இன்பம் உயர்வு எல்லாம் கணவனாலேயே அமைகின்றன."

"பெண்மணியே! உன் சொற்கள் அமுதம்போல் இனிக்கின்றன. கணவனுக்கு மனைவியில்லையானால் வாழ்வு ஏது? ஒவ்வொருவர் போனால் ஒவ்வொன்று போகும் என்று கூறிய ஔவையார் மனைவி போனால் எல்லாமே போய்விட்டன என்கின்றார். இந்தப் பாடலை நீ பார்த்திருப்பாய்! இருந்தாலும் நினைவுபடுத்துகின்றேன் கேள்.

தாயோ டறுசுவைபோம் தந்தையோடு கல்விபோம்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்— ஆயவாழ்வு
உற்றா ருடன்போம் உடன்பிறப்பால் தோள்வலிபோம்
பொற்றாலி யொ(டு) எவையும் போம்.

கற்புடைய மனைவியினாலேயே கணவனுக்கு எல்லா பாக்கியங்களும் விளைகின்றன.

"ஏரைப் பிடித்தவன் என் செய்வான்?
பானை பிடித்தவள் பாக்கியம்"

என்ற பழமொழியைப் பார். வாழ்வில் மகிழ்ச்சி சுகம் அறச்செயல் என்ற யாவும் மனைவியில்லாத ஒருவனுக்கு ஏது? சிவபெருமான் உமையுடன் சேர்ந்து நலம் தருகின்றார். சீதையுடன் சேர்ந்து இராமர் உயர்வு பெற்றார். சாவித்திரியால் சத்தியவான் வாழ்வு பெற்றான். சந்திரமதியில்லையானால் அரிச்சந்திரனுக்குப் பெருமையேது? திருவெண்காட்டு நங்கையில்லையானால் சிறுத்தொண்டருக்கு சிவகதி கிடைத்திருக்குமா? ஆதலால் உத்தம பத்தினிக்கே பெருமை:"

"என் ஆர்வலரே! ஆண்கள் விரும்பினால் திருமணம் செய்து கொள்ளாமல் பிரம்மசாரியாகவே வாழலாம். அதற்கு நைஷ்டிக பிரமசர்யம் என்று பேர். திருமணம் ஆகாமல், மாதரை மனத்தாலுந் தீண்டாமல் பெருமை பெற்றவர்கள் அநுமர், பீஷ்மர், சிவப்பிரகாசர், குமரகுருபரர் முதலிய ஞானிகள். பெண்கள் திருமணம் செய்து கொள்ளாமல் கன்னிகையாகவே இருக்க நமது வேத தர்மத்தில் விதிக்கவில்லை. எனவே ஒரு பெண் கணவனை மணந்து, அவனுக்குப் பணிவிடை புரிந்தால்தான் எல்லா நலன்களும் உண்டாகும்."

"பெண்கள் நாயகமே! பெண் தங்கம் போன்றவர்கள். மென்மையானவர்கள். ஆண்கள் இரும்பு போன்றவர்கள்; வன்மையானவர்கள். இரும்பினும் பொன் பெருமையுடையதல்லவா?"

"பிராணேசா! ஒப்புக் கொள்ளுகிறேன். ஆண் இரும்பு; பெண் தங்கம். ஆனால் இரும்புப் பெட்டியில் தங்கம் அடங்கியுளது. பெண்கள் எப்போதும் காவலுக்கு உட்பட்டவர்கள் ஆதலால் 'காவல் தானே பாவையர்க்கழகு' என்று ஔவையார் கூறியுள்ளார். காவல் செய்கின்ற ஆணுக்குத் தானே பெருமை; காவலுக்கு உட்படுகின்ற பெண்ணுக்கு ஏது பெருமை?"

"இல்லை. உன் கூற்று பொருந்தாது. ஒரு மன்னர்—மந்திரி முதலிய அதிகாரிகள் காவலுடன் செல்லுகின்றார்கள். அதனால் அவருக்குப் பெருமையில்லையா? காய்கறிக் கூடைகள் வெளியே போனால் காவலுடன் போகமாட்டா? பணப்பெட்டி வெளியே சென்றால் காவலுடன் செல்லும். காவலுடன் செல்லும் பணப் பெட்டிக்குத்தானே பெருமை? பெண்கள் உயர்ந்தவர்கள்; ஆதலால் காவலுடன் வெளியே செல்லுகின்றார்கள். அன்றியும் பெண்ணின் குணநலம் யாவருக்கும் கிடையாது. ஒரு கணவன் தன் மனைவி காலமானவுடன் மற்றொரு பெண்ணை விரும்பி மணந்து கொண்டு அவளுடன் இன்புறுகின்றான். ஒரு மனைவி தன் கணவன் காலமானவுடன் தன் வாழ்வுக்கு முற்றுப் புள்ளி வைத்துவிடுகின்றாள். இதனால் ஆணினும் பெண்ணே சிறந்தவள். இன்று இந்த பாரத நாட்டில் மதம் சமயம் பக்தி எல்லாம் பெண்மணிகளால் புத்துயிர் பெற்றிருக்கின்றன. பத்தர்களையும் தத்துவஞானிகளையும் பின் வரிசையில் வைத்து, பத்தினியை முன் வரிசையில் நிறுத்திப் பாடுகின்றார் திருமூலர்.

"பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்"

இன்னும் பலப்பல நியாயங்கள் உண்டு.

இவ்வாறு இருவரும் மிக நுட்பமாகவும் திட்பமாகவும் வாதிட்டு உரையாடினார்கள்.

"பெண்மாணிக்கமே! நாம் ஆண் உயர்வா? பெண் உயர்வா? விவாதத்தை நாளைக்கு வைத்துக்கொள்ளுவோம். வா. போய்ப்படுப்போம்" என்று கூறி, மயூரத்துவஜன், தன் காதல் மனைவியுடன் பள்ளியறைக்குச் சென்றார்.

அங்கு மணிவிளக்குகள் சுடர் செய்து கொண்டிருந்தன. கமகம என்ற நறுமணம் கமழ்ந்து கொண்டிருந்தது. அழகிய படங்கள்; நிலைக்கண்ணாடிகள் சுவர்களில் அமைந்திருந்தன. தங்கரேக்குகளும் இரத்தினக் கற்களும் பதித்த தங்கக்கட்டில், வெல்வெட்டு மெத்தை. பல கலர்களுடன் கூடிய தலையணைகள்; அதில் வேலைக்காரி கண் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

அவளை விஜயராணி எழுப்பினாள். அவள் திடுக்கிட்டு எழுந்தாள்; நடுங்கினாள்; அலறினாள். அரசியின் கால் மீது விழுந்தாள்.

"அம்மா! நான் ஏழை. இந்தப் படுக்கையை தினந்தோறும் அலங்கரிக்கின்ற எனக்கு இதில் படுக்க வேண்டும் என்ற ஆவல் இருந்தது. சும்மா படுத்துப் பார்ப்போம் என்று படுத்தேன். என்னை யறியாமல் தூங்கிவிட்டேன். என்னை மன்னித்துக் காத்தருளவேண்டும்" என்றாள்.

அதே சமயம் கீழே ஒரு சாதுவைக் காவலர்கள் அடிக்கின்ற ஓசை கேட்டது.

மன்னன் மேலிருந்தபடியே காவலர்களையும் சாதுவையும் அழைத்தான். "ஏன் இந்த சாதுவை அடித்தீர்கள்?" என்று கேட்டான்.

காவலர்கள் "வேந்தர் பெருமானே! தாங்களும் மகாராணியும் உண்டு எறிந்த வாழைப்பழத்தோலை இவன் எடுத்து உண்டான். அனுமதியில்லாமல் அரண்மனைக்கு அருகில் வந்தது ஒரு குற்றம்; வாழைப்பழத்தோலை எடுத்து உண்டது ஒரு குற்றம். அதனால் நையப் புடைத்தோம்" என்றார்கள்.

சாது சிரித்துக்கொண்டே நின்றார், அரசன் "சாதுவே! இவர்கள் அடித்தால் நீர் சிரிக்கின்றீரே! அழ வேண்டிய சமயத்தில் அகாரணமாகச் சிரிக்கின்றீரே! உமது சிரிப்புக்குக் காரணம் யாது? கூறும்" என்றான்.

சாது "வேந்தர் பெருமானே! உமக்கு வரப்போகும் துயரத்தை நினைத்துத்தான் சிரிக்கின்றேன். இந்த வாழைப்பழத்தோலை எடுத்து உண்டதற்கு எனக்கு இத்தனை அடிகள் விழுமானால், பழங்களை உண்ட உமக்கு இறைவன் எத்தனை அடிகள் தருவாரோ? நீர் என்ன தண்டனைக்கு ஆளாகப் போகின்றீரோ? என்று எண்ணிச் சிரிக்கின்றேன்" என்றார்.

அரசனுடைய கண்கள் குளமாகியது. சாதுவை வணங்கினான். அவர் பசிதீர பழமும் பாலுந்தந்து உபசரித்தான். அவரை அன்புடன் அனுப்பி வைத்தான்.

இதனை மகாராணி பார்த்தாள். ஒருநாள் இந்தப் பஞ்சணையில் படுத்ததற்கு நாம் வேலைக்காரி மீது கோபிப்போமானால், பல நாள் இந்தப் பஞ்சணையில் படுக்கின்ற நம்மை இறைவன் கோபிக்கமாட்டானா?" என்று நினைந்து இரக்கமுற்றாள். அந்தப் பஞ்சணையைச் சுருட்டி வேலைக்காரியிடம் தந்து, நீ தினந்தோறும் இதில் படுத்து மகிழ்வாயாக" என்று அன்புடன் கூறியனுப்பினாள்.

சாதுவின் சொற்கள் விஜயராணியையும் மயூரத்துவஜனையும் உணர்வு நரம்பினைத் தட்டியது.

விஜயராணி கணவனைக் கண்டு கூறினாள். "பெருமானே, எத்தனையோ ஏழைகள் உண்ண வுணவும் உடுக்க உடையும், படுக்கப் பாயும் இன்றித் தவிக்கும்போது தனவந்தர்கள் மிகமிக ஆடம்பரமாக உடுப்பதும், உயர்ந்த படுக்கையில் படுப்பதும், அளவுக்கு மீறிய சுவையுடைய உணவுகளை வயிறு புடைக்க உண்பதும் பிழை. ஆண்டவன் நமக்குத் தந்த செல்வங்களை வறியவர்க்கு வழங்கி வாழ வைக்க வேண்டும். தாவிப்படரக் கொழு கொம்பிலாது தனியே அலைந்து

வாடிய முல்லைக் கொடிக்குத் தன் மணித்தேரைத் தந்த பாரிவள்ளல் இன்று புகழுடம்பு பெற்று வாழுகின்றான். கருணைதான் உயிர் வாழ்க்கையின் ஜீவநாடி. கருணையில்லாத வாழ்வு வாழ்வு ஆகாது. அரசே! நமது நாட்டில் பஞ்சமும் பட்டினியும் வறுமையும், சிறுமையும் இருக்கக் கூடாது. தாங்கள் நமது கருவூலத்தில் வீணே முடங்கிக் கொண்டிருக்கின்ற செல்வத்தை நம் நாட்டு ஏழைகள் வயிறார வுண்டு மகிழ ஈந்து இன்புறுவீராக" என்றாள்.

மனைவியின் மதியுரையைக் கேட்ட மன்னன் அவ்வாறே கருவூலத்தில் உள்ள பொன் குவியல்களை வாரி வாரி வறியவர்க்கு வழங்கினான்.

ஒருநாள் அரண்மனைக்கு ஒரு சாது வந்தார். அரசன் அவரை வரவேற்று ஆசனத்தில் இருத்திப் பெரிய தலைவாழையிலை யிட்டு உயர்ந்த உணவுகளைப் படைக்கச் செய்தான். அந்த சாது சிரித்தார்.

"சுவாமீ! ஏன் சிரிக்கின்றீர்கள் சாப்பிடுங்கள்" என்றான் மன்னன்.

சாது "அரசனே! எனக்கு இந்த உணவுகள் வேண்டாம். பணக்காரனுடைய வீடு தீப்பிடிக்குமானால் பன்னீர் விட்டுத்தான் அணைக்க வேண்டுமா? தண்ணீர் விட்டால் தீ அணையாதா? அதுபோல் நம் வயிற்றில் பசித் தீ யெழுமானால் பாலுந்தேனும் நெய்யும் பழமும் போட்டுத்தான் பசித்தீயை அணைக்க வேண்டுமா? பழங்கஞ்சியை யுண்டால் பசித்தீ யணையுந்தானே?

"கனி யேனும் வறிய செங்கா யேனும் உதிர் சருகு
கந்த மூலங்க ளேனும்
கனல் வாதை வந் தெய்தின் அள்ளிப் புசித்து நான்
கண் மூடி மௌனி யாகித்
தனியே இருப்பதற்கு எண்ணினேன் எண்ணமிது
சாமி நீ யறியாததோ
சர்வபரி பூரண அகண்டதத்துவமான
சச்சி தானந்த சிவமே"

என்ற ஆன்றோர் அமுத வாக்கை உன்னிப் பாரும். ஆதலால் இந்த வுயர்ந்த வுணவை விரும்புவார்க்குத் தருவீராக. எனக்குப் பழங்கஞ்சி போதும். நான் நாவுக்கு அடிமையாகாதவன்" என்றார்.

அரசன் அது கேட்டு உள்ளம் உருகினான். ஆ! ஆ! சாதுக்களின் உள்ளமும் உரையும் உணர்வும் உயர்ந்தவை. இத்தகைய சிறந்த எண்ணங்கள் இன்றி மக்கள் நல்லுணவையே நாடி அலமருகின்றார்களே! நல்ல உணவு கிடைக்காதபோது வாடுகின்றார்களே. மக்களை அதிகமாக அடிமைப்படுத்தி அரசு புரிவது நாக்கிந்திரியந்தான். நாவை வென்றவன் பூவை வெல்லுவான்" என்று உணர்ந்தான்.

உ

முருகா

# தொல்காப்பியமும் சைவசித்தாந்தமும்

(இராவ் சாகேப். கு. கோதண்டபாணி பிள்ளை)

(120-ஆம் பக்கத் தொடர்ச்சி)

'தொல்காப்பியம் சிவமயம்' என்ற நூலொன்றிருந்தாகத் தெரிகின்றது. இக்காலத்தே அது கிடைத்திலது. இறந்துபட்டது போலும். தொல்காப்பியம் சிவமயமென்னும் நூல் இயற்றப் பெற்றிருந்ததென்பது மறைஞானசம்பந்தர் செய்த 'பதிபசுபாசப் பனுவல்' என்ற 337—குறள் வெண்பா நூலின் சிறப்புப் பாயிரம் அகவற்பா (35 அடியுள்ளது) கூறுகின்றது.

அது வருமாறு :—

" தாண்டவம் புரிவோன் சரண கமலன்
புந்தியில் நாளும் சிந்தனை பண்ணி
அப்பதி தன்னில் அருங்குகை மடத்தில்
எப்பதி யோரும் ஏத்தவும் இருந்தோம்
இகமது தன்னில் சுகனையொப் பானேன்
வெண்ணெயம் பதியில் மெய்கண்ட தேவன்
மண்ணிடை மீண்டும் வருதலையொப் பானேன்
அருந்தமி ழுணர்வால் அகத்திய முனியென
திருந்துதொல் காப்பியம் சிவமயம் செய்தோன்
.... ........... .... ... ..........................
சிவதரு மோத்திரம் தமிழாற் செய்தோன்
நண்ணிய தவமறை ஞானசம் பந்தன்
......................................... . .........…"

எனக் குறிப்பிடுவதையுங் காண்க.

---

அதுமுதல் மன்னவன் தன் மனைவியுடன் ஜனகரைப் போல் இல்லற ஞானியாக வாழ்ந்தான். அவனுடைய அரண்மனையில் சாதுக்கள் பலர் வாழ்ந்தார்கள்.

அரண்மனையில் பல இடங்களில்,

'உணவு தேடுவதோடு உணர்வுந் தேடு"

என்ற வாசகம் எழுதிய பலகைகள் தொங்கி அலங்கரித்தன.

விஜயராணி சிறந்த ஞானச் செல்வியாக நாயகனுடன் வாழ்ந்தாள்.

இம் மறைஞானசம்பந்தர் சந்தான குரவருள் ஒருவராகிய மறை ஞானசம்பந்தரின் வேருனவராவார். இவர் களந்தை ஞானப் பிரகாசரின் சீடராவார் என்பர் சிலர். இவர் பதினறு நூல்களியற்றி யுள்ளனர். அவற்றிலொன்று முத்தி நிலை. இந்நூலை மறுத்துத் தரும புரம் குருஞான சம்பந்தர் 'முத்தி நிச்சயம்' என்ற நூலை எழுதினு ரென்பர். இவர் சிதம்பரம் கண்கட்டி மறைஞான பண்டாரத்தின் மாணவர் என்பாரும் உளர்.

இவ்வாறு தொல்காப்பியம் சைவசித்தாந்த மெய்ப்பொருளிய லுக்கு அடிப்படையாகவும், அரணுகவும் அமைந்ததோடன்றி, சித்தாந்தக் கருத்துக்களுக்கு ஒரு பிரமாண நூலாகவும் அமைந் துள்ளது. சிவஞான சித்தியாருக்கு உரை எழுதிய அறுவருள் ஒருவ ரான மறைஞான தேசிகர் தொல்காப்பியத்தை ஒரு பிரமாண நூலாக ஆகமங்களோடு ஒத்த நிலையில் கையாள்வதைக் காணலாம்.

கால தத்துவத்தை விளக்குமிடத்துப் பிரமாணவியல் 29. செய் யுளுரையில் :

''இதற்குப் பிரமாணம், 'பரமத நிராகரணம்', 'காரணுகமம்', 'பௌட்கரம்' எனக் காண்க;

'' இறப்பே நிகழ்வே எதிர தென்றும்
திறத்தியல் மருங்கில் தெரிந்தனர் உணரப்
பொருள்நிகழ் உரைப்பது காலம் ஆகும்''

(தொல்—செய்யுளியல்—194)

என்றார் தொல்காப்பியர்,'' என ஆகமத்தோடு ஒத்த நிலையில் தொல் காப்பியத்தை எடுத்துக்காட்டுவதைக் காண்க,

ஆகமங்களோடு ஒத்த நிலையில் தொல்காப்பியத்தைக் கருதியதும் அதிலிருந்து கால தத்துவத்தை விளக்க மேற்கோள் காட்டுவதும் சித்தாந்தக் கருத்துக்களுக்கு உள்ள நெருங்கிய தொடர்பைக் காட்டும். இங்கு மேற்கோள் காட்டிய தொல்காப்பிய நூற்பாவின் கருத்து இக்காலத்தே மேலைநாட்டு மெய்ப்பொருள் அறிஞர்கள் (தத்துவ அறிஞர்கள்) விளக்குவதை முற்றிலும் ஒத்திருக்கிறது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. மேலும் விளக்குதலுறின் பெருகும்.

மேலும் சிவஞான சித்தியார் பிரமாண இயல் 111-வது நூற் பாவின் கருத்தைத் தொல்காப்பியத்தின் நூற்பாவைக் கொண்டே இவ்வாசிரியர் விளக்குவதைக் காணலாம்.

சிவஞான சித்தியார் சுபக்கம் பிரமாண இயல் சூத்திரம்—2 அதி—2, செய்யுள்—111.

'' உலகுடல் கரணம் காலம்
உறுபலம் நியதி செய்தி

பலஇவை கொண்டு கன்மம்
    பண்ணுவ துண்ப தானல்
நிலவிடா திவைதாம் சென்று
    நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளா
தலகிலா அறிவன் ஆணை
    அணைத்திடும் அருளி னாலே''

மறைஞான சம்பந்தர், மேலதற்கோர் புறனடை உணர்த்துகின்றார். என்பது, உலகு உடல் கரணம் காலம் உறுபலம் நியதி செய்தி பல இவை கொண்டு கன்மம் பண்ணுவது உண்பது ஆனல் புவனமும் தனுவும் கரணமும் காலமும் அதனல் உறுவிக்கும் விடயமும் அவ் விடயத்தை வரையறை பண்ணிப் புசிப்பிக்கும் நியதி தத்துவமும் இவையிற்றின் தொழிலும் பலமும் ஆகிய எண்விதமான கரணங் களைக் கொண்டு சிவன் ஆன்மாக்கள் செய்த கன்ம பலன்களைச் செய் வதும் புசிப்பிப்பதும் ஆன இடத்து வினை முதலிய எண்வகையான் நிகழப்படும்.

வினை ஆன்மாக்கள் செய்யும் தொழில். செய்பவன் ஆன்மா. செயப்படு பொருள் இருவினை, நிலன் அவ்வான்மாக்கள் இருக்கும் புவனம் காலம் முக்காலங்களையும் உண்டாக்கும் காலதத்துவம், கருவி முப்பத்தாறு தத்துவம், இன்னதற்கு என்பது இருவினைப் பயன் களைப் புசிக்க வேண்டிய காரணம், பயன் என்பது சுகதுக்கங்களைப் புசித்துத் தொலைந்த பின் கன்மக்ஷயம் பிறந்து மோட்சம் அடைகை என அறிக.

மறைஞான தேசிகர் இச்செய்யுளுக்கு மேலே தரும் விளக்கத் தோடு தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் 113-வது நூற்பாவை ஒப்பிட்டு நோக்குக!

" வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி என்ரு
இன்னதற் கிதுபயன் ஆக வென்னும்
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின்முதல்நிலையே''

எழுவகை வேற்றுமையினும் காரக வேற்றுமை வரையறுத்து உணர்த் துதல் நுதலிற்று.

(இ - ள்) வினையும், கருத்தாவும், செயப்படுபொருளும் இடமும், காலமும், கருவியும் என்று சொல்லப்பட்டவற்ருேடு கொள்வதூஉம் பயனும் ஆகிய அவ்விரண்டொடும் தொகைஇ, அவ்வெட்டென்று சொல்லுவர் தொழிற் காரகம் என்றவாறு.

தொல்காப்பிய நூற்பாவின் சொற்களையே தேசிகர் எடுத்தாண்டு அவற்றைச் சித்தாந்தக் கருத்திற்குப் பொருத்திக் காட்டும் சிறப்பைக்

காண்க. தொல்காப்பியம் கூறும் எழுத்தின் பெயர். அவற்றினியல்பு, சொற்களின் அமைப்பு முதலியவை தொல்காப்பியர் ஏற்படுத்தினவை யல்ல. இவற்றைக் குறித்துத் தொல்காப்பியர் உயிரென மொழிப, மெய்யென மொழிப என்றும், என்ப, என்மனர் என்னும் சொல் லாட்சிகளும், தொல்காப்பியத்திற்கு முன்பே இவை வழக்கத்தி லிருந்தன என்பதைக் காட்டும். பேச்சு மொழியிலிருந்து ஒலிகளைப் பிரித்தெடுத்து எழுத்திணுக்கமும், கிளவியிணுக்கமும் தோன்றிய வர லாற்றுக் கெட்டாத அப்பழங்காலத்தே மேலே கூறிய மெய்ப் பொரு ளியல் பெயர்கள் இடப்பட்டனவாதல் வேண்டும். தமிழ் மொழி என்னும் இயற்கைச் செம்மொழி என்று வகுக்கப்பட்டதோ, அல்லது என்று தொடங்கியதோ அதற்குப் பல நூற்றாண்டுக்கு முந்தியே மெய்ப்பொருளியல் அல்லது தத்துவக் கருத்துக்கள் தமிழ்நாட்டில் வழங்கியிருத்தல் வேண்டும். இவ்வாறு அம்மெய்ப் பொருளியல் பெயர்கள் வழக்கத்திலிருந்தாலன்றி மொழி அமைப்பிலவை இடம் பெற்றிருக்குமா என்பதைக் கருதுக. ஆதலின் வரலாற்றுக்கெட்டாத மிகப் பழங்காலத்திலிருந்தே சித்தாந்தக் கருத்துக்கள் தமிழ் நாட்டி லும், தமிழ் மொழியிலும் அமைந்திருந்தன என்பதைக் காட்டத் தொல்காப்பியத்திற்கும் சித்தாந்தத்தின் கருத்துக்களுக்கும் ஏற்பட் டுள்ள தொடர்பு தக்க சான்றாக அமைந்துள்ளது.

மொகஞ்சதாரோ, ஆரப்பா புதை பொருள்களை ஆராய்ந்த சர் ஜான் மார்ஷல் என்பவர், இப்புதை பொருளாராய்ச்சி பல வியப்பு களைத் தருவது. அவைகளைவிட மிகவியக்கத்தக்கது,சிவமதம் என்பது. 'சால்கோ லித்திக் ஏஜ்' (Chalcolithic age) என்று பழம் பொருளா ராய்ச்சி கூறும் மிகப் பழங்காலத்தில் அல்லது அதற்கு அப்பாலிருந்து இச்சிவமதம் தொடங்குகின்றதென்பதாகும். ஆதலின்உலகத்திலுள்ள எல்லா மதங்களுள் இதுவே மிகப் பழமையானதென இடம் பெறு கின்றது தொல்காப்பியம் காட்டும் தமிழ்மொழி இயலுக்கும், சைவ சித்தாந்தக் கருத்துக்களுக்கும் உள்ள தொடர்புகள் மேலே எடுத்துக் காட்டியவை. சர் ஜான் மார்ஷல் கூறும் கருத்துக்கு அரண் செய் கின்றன. கி. மு. 5000 ஆண்டுகளுக்கு முந்தியது மொஹஞ்சதாரோ பண்பாடு என்பது அப் புதைபொருள் ஆராய்ச்சியாளர் கருத்து. இவ் வையாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது சைவ மெய்ப்பொருளியல் கருத்துக்களாதல் வேண்டும். (முற்றும்)

---

Sir John Marshal in his preface to Mohenjo Daro and the Indian civilization says:— "Among the many revelation that Mohenjo Daro and Harappa have had in store for us none perhaps is more remarkable than this discovery that Saivism has a history going back to chalcolithic age or even further still and it thus takes its place as the most ancient faith in this world."

# மகாபாரதம்

## சாந்தி பருவம்

### மோக்ஷ தருமம்

(117-ஆம் பக்கத் தொடர்ச்சி)

யாஜ்ஞவல்கியர் ஜனகனைப் பார்த்து மீண்டுங் கூறுகின்றார். "மிதிலாதிபதியே! சரஸ்வதி என் உடம்பில் புகுந்து எல்லா வகை ஞானத்தையும் அளித்தாள். முத்திக்கு ஞானந்தான் முக்கியமானது. ஞானத்தை பிராம்மணன், வைசியன், சூத்திரன், நீசன் என்ற யாரிடத்திலேயும் பெறலாம்" என்று உபதேசித்தார்.

### ஜனகரும் சுலபையும்

பீஷ்மர் "அரசனே! முன்னொரு சமயம் இல்லற சன்யாசியும், தர்மத்வஜரும், வேத நூல்களிலும், தரும நூல்களிலும் தேர்ச்சி பெற்றவரும், பொறி புலன்களை வென்றவருமாகிய ஜனகர் மிதிலையை யாண்டு கொண்டிருந்தார். யோக தருமத்தில் நின்ற சுலபை யென்ற ஒரு பிக்ஷுகி உலக முழுவதும் சுற்றிக்கொண்டு அங்கே வந்து சேர்ந்தார். அங்குள்ள திரிதண்டிகளான யதிகள் 'மோக்ஷ தருமத்தில் ஜனகர் வல்லவர்' என்று கூறக் கேட்டாள். அவரைச் சோதித்து அறிய வேண்டும் என்று அவள் நினைத்தாள். தன் பழைய வடிவை விடுத்து அழகிய வடிவத்தைக் கொண்டு, அஸ்திர வேகத்தில் இமைப் பொழுதில் அவரிடம் சென்றாள். ஜனகர் அவளை வரவேற்று அன்னம் தந்து உபசரித்தார். அவள் அவருடைய உள்ளத்தில் சூட்சுமமாகப் புகுந்து அவருடைய அறிவைத் தன் அறிவுடன் சேர்த்தாள். ஜனகர் தன்னுள் நுழைந்த அவருடைய யோக சக்தியைக் கண்டு, தான் அதினின்றும் மீண்டு கேட்கின்றார். "ஏ பிக்ஷுகியே! நீ யார்? எங்கே போகின்றாய்? இந்த யோக அநுஷ்டானத்தை யாரிடம் பயின்றாய்? எங்கிருந்து வருகின்றாய்? உன்னை நான் அறிய விரும்புகின்றேன். அம்மா! நான் பராசர முனிவருக்குச் சமானரான பஞ்சசிக முனிவருடைய சீடன். பஞ்சசிகர் மழைக்காலமான நான்கு மாதங்கள் என்னிடந்தங்கி மோக்ஷ தருமங்களை எனக்கு உபதேசித்தார். எனக்கு எதிலும் பற்றில்லை. விருப்பு வெறுப்பு இல்லை. என்னுடைய வலக்கையைச் சந்தனத்தால் நனைப்பவனையும், இடக் கையை வாளினால் வெட்டுபவனையும் நான் சமமாகப் பார்க்கின்றேன். எனக்குப் பொன்னும் ஓட்டாஞ்சில்லியும் ஒன்றாகக் காட்சி யளிக்கின்றன. காவி தரித்தல் மொட்டை யடித்துக் கொள்ளுதல் முக்

கோல், கமண்டலம் என்ற இவைகள் முத்தி நெறிக்கு வெளிப்படையான அடையாளங்கள். ஆனால் இவையே முத்திக்குக் காரணமாகா. துக்க நீக்கத்துக்கு ஞானமே காரணமாகும். ஞானமில்லாத வெறும் அடையாளம் பயனற்றது. நான் இந்த அடையாளங்கள் இன்றியே, அரச தருமத்தில் நின்றே பற்றற்றிருக்கிறேன். பந்த பாசமான கயிற்றை, மோக்ஷமாகிய கல்லில் தீட்டப்பெற்ற தியாகமென்ற கத்தியால் யான் அறுத்துவிட்டேன். அம்மா பிக்ஷுகியே! என்னை நீ சோதிக்கும் பொருட்டு மாறுவேடத்தில் வந்திருக்கின்றாய். நீ என் உள்ளத்தில் புகுந்தது நியாயமாகாது. உன்னுடைய அறிவை என் அறிவுடன் சேர்த்தது அறமுமாகாது. உன் கணவன் யார்? நீ செய்தது நன்றன்று. பெண்களிடத்திலும், பிராம்மணனிடத்திலும், அரசனிடத்திலும் கள்ளத்தனமாக அடையக் கூடாது. கபடமாக அணுகுகின்றவர்கள் அழிவார்கள். அரசர்களுக்கு ஐசுவர்யம் பலம்; பெண்டிர்களுக்கு இளமை அழகு கற்பு என்பவை பலம்; அந்தணர்கட்கு வேதம் பலம். ஆதலால் அரசரிடமும் அரிவையரிடமும் அந்தணரிடமும் நேர்வழியில் அணுக வேண்டும். கோணலான வழியில் போகக் கூடாது. ஆதலால் நீ உன் குலம் வித்தை ஆசாரம் எண்ணம் வரவின் நோக்கம் இவைகளை உள்ளபடி உரை'' என்று கேட்டார்.

இவ்வளவும் கேட்ட சுலபை மறுமொழி கூறுவாளாயினள்; ''அரசனே! சொல்லின் குற்றம் ஒன்பது; புத்தியின் குற்றம் ஒன்பது. இந்தக் குற்றங்கள் இல்லாததும், மயக்கமில்லாததும் தெளிவுள்ளதுமான உண்மையான வாக்கியங்களை நான் வசனிப்பேன். அரக்கும் கட்டையும் சேர்ந்திருப்பதுபோல் இந்த வுடம்பும் உயிரும் சேர்ந்திருக்கின்றன. ஆண் பெண் என்பது உடம்புக்குத்தான். உயிருக்கு இல்லை. கணந்தோறும் உடம்பு மாறுபாட்டை யடைந்து கொண்டிருக்கின்றது. நீ யார்? எங்கிருந்து வந்தவள்? என்று நீ என்னைக் கேட்பது பயனுள்ள கேள்வியன்று. பத்தியமில்லாதவனுக்கு மருந்து பயனைத் தராததுபோல் யோக நெறியில்லாதவனுக்கு முத்திநெறி சித்திக்காது. அரசன் அந்த ராஜ்யம் முழுவதும் சொந்தம் என்று கருதுகின்றான். ஆனால் அரசன் ஒரு வீட்டில், ஓரறையில் ஒரு கட்டிலில் மனைவியிருந்தால் பாதி கட்டிலில்தான் படுக்கின்றான். அரசபோகத்தால் சுகம் ஏது? அரசனை நித்திரை செய்யவிடாது பலர் பல காரியங்களைச் செய்யச் சொல்லுகின்றார்கள். தாமரையிலை தண்ணீரைத் தொடாமலேயே தண்ணீரில் இருப்பதுபோல் நான் உன்னைத் தீண்டாமல் உன்னிடம் வசிப்பேன். பானையில் பால் இருப்பதால் பானை பாலாவதில்லை. அதுபோல் உடம்பில் உயிர் இருக்கின்றது. நான் எல்லாவற்றையும் அறிந்தவள். நான் பிரதானர் என்ற ராஜரிஷியின் குலத்தில் உதித்தவள்; சுலபை என்ற பேர் பூண்டவள். துரோண பர்வதம், சதச்ருங்க பர்வதம், வக்ரத்வாரம் என்ற மலை, மகேந்திர

மலை என்ற மலைகளில் என் முன்னோர்கள் யாகங்கள் செய்துள்ளார்கள். அந்த நற்குலத்தில் வந்த நான் எனக்கு நிகரான கணவன் இல்லாமையால் மோக்ஷ தருமத்தை மேற்கொண்டு முனிவிரதத்தை அநுஷ்டிக்கின்றேன். உன்பால் இன்று தங்கி நாளை போவேன்'' என்று உயர்ந்த வுரைகளை உரைத்தாள்.

## சுகருடைய வரலாறு

தரும புத்திரர் ''பிதாமகரே! வியாச முனிவருக்கு மிகச் சிறந்த சுகர் எவ்வாறு தோன்றினர். சுகருடைய தாயார் யார்? சுகர் குழந்தையாக இருக்கும்போதே ஞானம் எவ்வாறு உண்டாகியது? சுகரைப் போன்ற ஒரு உத்தம ஞானி உலகில் வேறு யார் இருக்கின்றார்? ஆதலால் சுகருடைய பெருமையைக் கூறவேண்டும்'' என்று கேட்டார்.

பரம ஞான சீலராகிய வேதவியாசர் உத்தமமான புதல்வனை வேண்டி மேரு மலையில் உக்கிரமான தவஞ் செய்தார். காற்றே உணவாகக் கொண்டு, மகாதேவரை நோக்கிக் கடுந்தவஞ் செய்தார். தேவாதி தேவரான மகாதேவர் அவருடைய தவத்துக்கு மகிழ்ந்து கோடி சந்திர ஒளியுடன் உமாதேவியாருடன் காட்சி தந்தருளினர். பரமபதியான அவருடன், பிரமரிஷிகள், தேவரிஷிகள், லோக பாலகர்கள், வஸுக்கள், ஸாத்யர்கள், ஆதித்தர்கள், அசுவினி தேவர்கள், தேவகந்தர்வர்கள், உருத்திரர்கள், சூரிய சந்திரர்கள், ஏழு மருத்துக்கள், நாரத பர்வதர்கள், விசுவாவசு என்ற கந்தருவன், சித்தர்கள்; முத்தர்கள், பதினெண் கணங்கள் முதலியோர் சிவபெருமானைச் சூழ்ந்து துதி செய்தார்கள்.

கொன்றை மாலையணிந்து, சந்திரசேகரரானவர் வியாசருக்குக் காட்சியளித்தார். வியாசர் விடைமேல் வந்த விமலனைப் பலகாலும் பணிந்து, ''புரமெரித்த புண்ணியனே! அக்கினிக்கு நிகரான ஞானமும், ஆகாயம் போன்ற தூய்மையும் உடைய ஒரு ஞான குமாரனை எனக்குத் தந்தருளும்'' என்று வரம் கேட்டார்:

பரமேசுவரர் ''வியாசனே! உத்தமமான பிரம்ம ஞானமுடைய வித்தகப் புத்திரனை நீ அடைவாயாக'' என்று அருள் புரிந்து மறைந்தருளினர்.

வியாச முனிவர் அக்கினியை யுண்டுபண்ணுகின்ற அரணிக் கட்டையைக் கடைந்து கொண்டிருந்தார்; அழகின் சிகரமான கிருதாசியென்ற அரம்பை அங்கு வந்தாள். வியாசர் அவள்மீது விருப்பங்கொண்டார். அவள் பெண் கிளி வடிவுடன் அவரை யணுகினள். வியாசர் தமது மனதை அடக்கினர். அவருடைய வீரியமானது அந்த அரணியில் விழுந்தது. அந்த அரணித் தீயிலிருந்து

சுகர் பிறந்தார். சுக்கிரமானது அரணியில் கடையும்போது பிறந்த தனுல் சுகர் எனப் பேர் பெற்ருர். சுகர் அக்கினியைப் போல் ஒளி யுடன் விளங்கினுர். கங்காதேவி அங்கு வந்து அவரை நீராட்டினுள். சுகருக்காக யோகதண்டமும் கிருஷ்ணுஜினமும் விண்ணிலிருந்து வீழ்ந்தன. கந்தர்வர்கள் கானஞ் செய்தார்கள். அரம்பையர்கள் ஆடினுர்கள்; இந்திரன் முதலிய தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள், இனிய குளிர்ந்த காற்று நறுமணத்துடன் வீசியது. சிவபெருமான் உமாதேவியாருடன் அங்கே எழுந்தருளி பிறந்தவுடனேயே அவருக்கு விதிப்படி உபநயனம் செய்வித்தருளினுர். அநேக ஆயிரம் அன்னங் களும், ஸாரஸப்பட்சிகளும், கிளிகளும் அவரை வலம் வந்தன. அவர் மகா மேதாவியாக விளங்கினுர். வேதங்கள் உபநிட்தங்கள் முதலிய அனைத்தும் அவரை வந்தடைந்தன. பிறந்தவுடனேயே அவர் சிறந்த ஞானசீலராக இருந்தார். வியாழ பகவான் அவருக்குச் சகல கலைகளை யும் ஓதுவித்தார். அவர் பிரம்ம ஞானியாகி மற்ற ஆச்சிரமங்களை மேற்கொள்ள விரும்பாமல், எல்லோராலும் துதிக்கத்தக்கவராகவும் மதிக்கத்தக்கவராகவும் விளங்கினுர்.

## வியாசர் சுகருக்கு உபதேசித்தது

வியாசர் தமக்குரிய சகல வேதங்களையும் அத்யயனம் செய்வித்து உபதேசிப்பாராயினுர். நீ தருமத்தை அநுஷ்டித்து ஐம்பெரும் பூதங் களையும் வென்று உண்மை நெறியில் நிற்பாயாக. உயிர் நிற்பதற்காக மட்டும் குறைந்த வுணவை யுண். உலகம் நிலையில்லாதது. ஆயுள் குறைந்து கொண்டே யிருக்கின்றது. மூடர்கள் உடம்பை மட்டும் வளர்க்கின்றுர்கள். நீ தருமமான ஒளியில் ஏறுவாயாக! ஞானமாகிய தோணியால் பிறப்பென்னும் கடலைக் கடப்பாயாக. அறியாமையால் உறங்குகின்றவனை செம்மறியாட்டை ஓநாய் எடுத்துக்கொண்டு போவதுபோல் மிருத்யு எடுத்துக்கொண்டு ஓடுகின்றது. பல கோடி பிறவியெடுத்த பின் இந்த மனிதப் பிறப்பு வருகின்றது. அதிலும் பிராம்மணுகப் பிறப்பது அரிது. இந்தப் பிறப்பை வீணுக்கக் கூடாது, மகிழ்ச்சி, தூய்மை, தவம், வேதமோதல், ஈசுரத்தியானம். கொல்லாமை, பொய்யாமை, திருடாமை, பிரம்மசர்யம், பிரதிக் கிரகம் செய்யாமை என்ற பத்துக் குணங்களை உடையவன் மேன்மை யடைகின்ருன். பாவியானவன் கொதிக்கின்ற வைதரணி யென்ற நதியில் விழுகின்ருன். அஸிபத்திரம் என்ற நரகில் வீழ்ந்து உடம்பு அறுபட்டு அல்லல் அடைகின்ருன். நீ உடனே புறப்படு. கிழத்தனம் முடுகி வரும். மரணமடையும்போது ஒருவருந் துணை செய்யமாட்டார் கள். ஒருவன் செய்த புண்ணிய பாவங்களை அவனேதான் நுகர

வேண்டும். அதில் யாரும் பங்கு பெறமுடியாது, அது *யௌதகம் போன்றது. தீமையைச் செய்யக்கூடாது. நல்லதையே செய்ய வேண்டும். நாளை செய்வதை இன்றே செய்யவேண்டும். பிற்பகலில் செய்வதை முற்பகலிலேயே செய்யவேண்டும். இயமன் காரியம் முடியும் வரை காத்திருக்க மாட்டான். மாண்டவுடன் சுற்றத்தார் சுடலையில் சுட்டுவிட்டுத் திரும்பிவிடுகின்றார்கள், ஆதலால் விரைந்து முத்திநெறியைத் தேடு. எண்ணில்லாத தாய் தந்தையர்கள்; யார் நமக்குத் துணை? அறமும் தவமுந்தான் சிறந்த துணை.

மகனே! என் சீடனும் மிதிலாதிபதியுமான ஜனகரிடம் செல்லுவாய். அவன் முத்தி நெறியை உனக்குக் கூறுவான்'' என்று வியாசர் சுகருக்கு உபதேசித்தார்.

சுகர் வான்வழியே செல்லும் ஆற்றல் இருந்தும், மண் வழியே காலால் நடந்து சென்றார். மலைகளையும் ஆறுகளையும் விலங்குகள் நிறைந்த காடுகளையும் பல பட்டினங்களையுங் கடந்து விதேக தேயத்தை யடைந்தார். சோலைகள் சூழ்ந்த மிதிலாபுரியைக் கண்டார். வாயில் காக்குங் காவலர்களால் தடுக்கப்பட்டு நின்றார். காவலர்கள் அவரை இன்னார் என்று அறிந்து அஞ்சலித்து உள்ளே அனுமதித்தார்கள். இவ்வாறு ஒவ்வொரு கட்டிலும் தடுக்கப்பட்டு நின்றார். அப்போது அவர் வருந்தினாரில்லை. ஜனகருடைய அமைச்சன் அவரை அன்புடன் அழைத்துச் சென்றான். முடிவில் ஜனகரிடம் சென்றார். ஜனகர் அவரை வரவேற்று உணவு ஆசனம் முதலிய யாவுந் தந்து உபசரித்தார். நலம் வினவி, வந்த காரியம் யாது?'' என்று கேட்டார்.

சுகர் ''வேந்தே! உமக்கு மங்கலம். என் பிதாவால் அனுப்பப் பட்டு வந்தேன். மோட்ச தருமம் யாது? மோட்சத்தை யடைய வழி ஞானமா? தவமா? கூறும்'' என்று வினவினார்.

ஜனகர், ''முனிகுமாரரே! ஒருவன் இளமையில் வேதம் ஓதி, குரு தட்சிணை தந்து சமாவர்த்தனம் செய்து இல்லறத்தை மேற்கொள்ள வேண்டும். முறைப்படி இல்லறத்தில் அறம் பல புரிந்து ஐம்பெரும் வேள்விகளைச் செய்து வானப்பிரஸ்தனாக வேண்டும். வனத்தில் முனியாகித் தவஞ்செய்த பின் சந்நியாசியாக வேண்டும். பற்றுக்கள் அனைத்தையும் விடுத்து பிரம்மத்தை யடுத்து பிறப்பு இறப்புகளை ஒழிக்க வேண்டும்'' என்றார்.

சுகர் ''பிரம்ம ஞானம் அடைந்தவன் இல்லறம் முதலிய ஆச்சிரமங்களை மேற்கொள்ள வேண்டுமா? இதனை நீர் கூறும்'' என்று கேட்டார்.

---

*யௌதகம்—விவாக காலத்தில் கன்னிகைபோடு கொடுக்கப் படுவது; இதில் மற்றவர்க்குப் பாகமில்லை.

உ

முருகா

திருத்தணிகைக்குக்குரிய திருப்புகழ்ப் பாடல் ஒன்றில் வரும்

# ஒரு சொல்லுக்கு விளக்கம்

இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்
இடுக்கினை அறுத்திடும் எனஓதும்

இசைத்தமிழ் நடத்தமிழ் எனத்துறை விருப்புடன்
இலக்கண இலக்கிய கவிநாலும்

தரிப்பவர் உரைப்பவர் நினைப்பவர் மிகச்சக
தலத்தினில் நவிற்றுதல் அறியாதே

தனத்தினில் முகத்தினில் மனத்தினில் உருக்கிடு
சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ?

'இருப்பவல் திருப்புகழ்' என்னும் தொடர், திருப்புகழின் சிறப்பினைத் தெளிவுற உணர்த்துவதொன்ருகக் கொள்ளலாம். 'இருப்பவல்' என்பது, ஒரு கொடிக்குப் பெயர். இது பாம்பு போல் தரையோடு படர்ந்து, கிழங்கு பெரியதாகவும் பூக்கள் சிறிய தாகவும் மஞ்சளாகவும் இருக்குமாம். இஃது ஒரு காயகற்பக மூலிகை என்றும். இதனைக் கஷாயம் இட்டுக் கண்டமாலை, மேகம், உடம்புக் கோளாறு முதலியவைகளுக்குக் கொடுக்க

---

ஜனகர் "சுக முனிவரே! எவன் *இரண்டுகளை யறுத்து, தன்னிடம் பிற வுயிர்கள் பயப்படச் செய்யாமலும், தான் பிறரிடம் பயப் படாமலும் விருப்பு வெறுப்புக்களை விட்டவனுக இருக்கின்ருனே அவன் பிரம்மமாகின்ருன். எவன் சோக மோகங்களை அறவே விடுகின்ருனே அவன் பிரம்மமாகின்ருன். நீர் சிறந்த பிரம்ம ஞானி. நீர் எல்லா வகையான ஞானங்களும் உணர்ந்தவர். பிரம்ம உபாசனை செய்து பிரம்மத்தை யடைவீராக" என்ருர். வியாச குமாரர் அவருக்கு அன்புரை கூறி வடக்கு நோக்கிச் சென்ருர், இமயமலையில் பிதாவைப் பார்த்து வணங்கினுர். (தொடரும்)

---

*சுகம் துக்கம்; நினைப்பு மறப்பு, நிந்தனை வந்தனை; லாபம் நஷ்டம் முதலியன இரட்டைகள்.

லாம் என்றும் கூறுவர். இதன் இலையை எவ்வளவு நேரம் மென்ருலும், பற்களுக்குச் சிறுதும் மசியாது. இதனுல், அயம் பற்பமாகும். இதற்குப் புத்தர்கைச் சம்மட்டி, காயசித்தி, உப்பு நீக்கி, காரிய செந்தூரி, கானற்கள்ளி எனப் பல பெயர்கள் உண்டு என்பர்.

எனவே, 'இருப்பவல் திருப்புகழ்' என்ருல், உடற்பிணி நீக்குதலில் வல்ல 'இருப்பவல்' என்னும் மூலிகையைப் போன்று, உயிர்ப்பிணிகளைத் தீர்ப்பதில் வல்ல திருப்புகழ் என்னும் உண்மை புலனுகும்.

பண்டைத் தமிழ்ப் பெரியோர்கள் மருத்துவத் துறையில் வல்லவர்களாக விளங்கினர். '**மருத்துவன் தாமோதரனுர்**' என்று ஒரு சங்ககாலப் புலவரும் இருந்தனர். அதனுல், பழந்தமிழ் நூல்களில் பல, **திரிகடுகம்—சிறுபஞ்சமூலம்—ஏலாதி** என்பன போல, மருத்துவ முறையிலேயே பெயர்கள் அமைக்கப்பட்டிருக்கக் காண்கிருேம். அம்முறையில், 'இருப்பவல் திருப்புகழ்' என்பதும் அமைந்திருத்தல் அறிந்து மகிழ்தற்கு உரியது.

'இருப்பவல்' என்பது, இங்ஙனம் ஒரு கொடியின் பெயர் என்னும் விவரத்தினை, மலைமருந்து பிள்ளை என்னும் மருத்துவ அறிஞர் ஒருவர், 'வைத்திய அகராதி' என்னும் நூலினின்று எடுத்துக் காட்டி உணர்த்தியதாகத் தணிகைமணி. திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ. அவர்கள், ஒரு கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்கள்.

*[திருக்கோயில்]*

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | அச்சில் |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. 1-00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற்படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | ரூ. 2-50 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | அச்சில் |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்றாவது தொகுதி (மூன்றாவது படைவீடு—பழநி) | ரூ. 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலை) | ரூ. 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோறாடல் முதற்பாகம் | ரூ. 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆறும் தொகுதி (குன்றுதோறாடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலையும்) | ரூ. 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. 0-50 |
| 13, | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. 0-50 |
| 17. | அநசூயை (வரலாறுகள்) | ரூ. 1-00 |

---